ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
கார்த்திகை - நவம்பர் 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

குன்றக்குடி 15-11-2007 கந்தர் சஷ்டி விழா
சூரனைத் தடிந்தருளல்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : கார்த்திகை
மலர் : 21 இதழ் : 11


## சமயம்

சங்க காலத்தில் சமய நம்பிக்கை இருந்தது. கடவுள் நெறி வலியுறுத்திக் கூறப்படவில்லை. எனினும் ஆங்காங்கு கூறப்படுகின்றது. அதியனிடம் நெல்லிக்கனி பெற்ற ஔவையார்.

"நீல மணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே!"

என்று வாழ்த்தினார். நீலமணிமிடற்றினை உடையவன் சிவபெருமான்.

"விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் புரிவாய்"

பாற்கடலில் தோன்றிய நஞ்சைத் தாமே உண்டு உலக உயிர்களை உய்யவைத்த தியாகத் திருவுருவம்தான் நீலகண்டம். சங்க காலத்தில் சமய நம்பிக்கை சமய வழிபாடு முற்றிலும் இல்லை என்று கூற இயலாது. நெறிபட, நிரல்பட ஆங்காங்குப் பேசப்படுகின்றது.

பழந் தமிழகத்தில் ஒரு குரல் சமய எழுச்சிக்காக மானுடத்தின் நன்மைக்காக ஓங்கி ஒலிக்கின்றது.

"ஓர் இல் நெய்தல் கறங்க ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப,
புணர்ந்தோர் பூ அணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப,
படைத்தோன் மன்ற, அப் பண்பி லாளன்
இன்னாது அம்ம, இவ் உலகம்
இனிய காண்க, இதன் இயல்பு உணர்ந்தோரே" (புறம் 194)

இதே ஏக்கத்தை ஒன்பதாம் நூற்றாண்டில் நற்றமிழ்ச் சுந்தரரிடமும் காணமுடிகின்றது. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பக்தி சமய இலக்கியத்தின் எழுச்சிக் காலம் என்று கூறலாம். ஏழாம் நூற்றாண்டில் தொடங்குகின்ற போராட்டம் வெறும் சமய வழிப் போராட்டம் அன்று; தமிழர்களின் பண்பாட்டிற்கும் நாகரிகத்திற்கும் கலாசாரத்திற்கும் விடுக்கப்பட்ட அறைகூவல்.

சேக்கிழார், சமணர்களுக்கும் சம்பந்தப் பெருமானுக்கும் நடக்க இருந்த சொற்போரை,

"செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறை வெல்ல"

இருக்கின்றது என்று வருணிப்பார். ஆக ஏழாம் நூற்றாண்டில் தொடங்கி சேக்கிழாரின் காலம்வரை உள்ள திருமுறைக் காலம் வெறும் சமய எழுச்சிக் காலம் மட்டும் அன்று; சமயத்தைப் புனருத்தாரணம் செய்த வேள்விக் காலம். சேக்கிழாரின் திருமுறை சமூக மேடு பள்ளங்களைச் சரி செய்கின்றது. திருக்கோவில் பூசனை, சீலமுடைய - அன்புடைய பத்தியுணர்வுடைய எவரும் செய்யலாம் என்ற புரட்சியை இன்று மக்களின் அரசும் இருபதாம் நூற்றாண்டுப் புரட்சிச் சமூகமும் செய்ய முடியாத சாதனையை நிகழ்த்திக் காட்டுகிறது; தீண்டாமையை இல்லாது ஒழிக்கவும் ஏழை பணக்காரர் நிறைந்த சமூகத்தை எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கும் பொதுமைச் சமுதாயமாக்கவும் போராடுகின்றது. துறவிகள் நோற்கும் தவத்தை இல்லறத்தில் நோற்கமுடியும் என்ற புது நெறி காட்டுகின்றது; இதுவரை தோன்றியுள்ள உலக நீதி மன்றங்கள் கூறாத தீர்ப்பை ஆளும் அரசுக்குக் கூறியது. பூசலாரின் மனக்கோவிலில் இறைவனை எழுந்தருளச் செய்தது. இறைவனை வான் பழித்து; மண் நடந்து அடியவர்களைத் தேடி ஆட்கொள்ளச் செய்தது; அடியார்க்கு அடியனாய் எளியார்க்கு எளியனாய் அண்டர் நாயகன் அடியவர்களின் அன்புக்கு ஆட்படும் அருமையை விவரித்தது நேற்றைய சமயம். நேற்று சமயம் வாழும் மானிடத்தின் மூச்சுக் காற்று; ஒழுகலாறு. சமய வாழ்க்கை ஊனும் உயிரும் கலந்து பிரிக்க முடியாத வாழ்க்கை! அரசன் தழுவும் மதமே, மக்களின் மதம் என்ற முடியாட்சிக் காலத்தில் சமயம் எளிமையாக இருந்தது. கோவிலைத் தழுவிக் குடிகளும் குடிகளைத் தழுவிக் கோவிலும் அமைந்திருந்தன.

இன்று சமயம் மக்களுக்கு வேண்டியதை - மக்கள் விரும்புவதைத் தரும் அலாவுதீன் அற்புத விளக்கு என்ற மனோபாவம் வளர்ந்துவிட்டது. அதனால்தான் இன்று ஆண்டவன்கூடப் பணக்காரன் - ஏழை என்று பாகுபடுத்தப்பட்டுவிட்டான். திருப்பதி ஆண்டவனும் பழனி முருகனும் உலக வங்கிக்கு நிதி உதவி செய்யலாம். நம் தெருக்கோடி விநாயகரோ நித்திய பூசைக்குச் தடுமாறுகின்றார்! ஏன்? என்ன காரணம்? எந்த ஆண்டவன் பணம் அள்ளித் தருவார் என்ற நம்பிக்கையை மக்களுக்கு உண்டாக்கினாரோ அவர் பணக்காரராக மாறிவருகின்றார். இதுதான் இன்றைய சமயநிலை.

நாளை எப்படி சமய உலகம் இருக்கவேண்டும்? சமயம் மனிதனை உழைக்காமல் செல்வன் ஆக்க அன்று; அவனை வாழ்வாங்கு வாழச் செய்து வாழும் நிலையை உயர்த்தத்தான். சமயம் மீண்டும் தொண்டு நெறியின் உறைவிடமாக மாறவேண்டும். மானுட சமூகத்தின் மையங்களாகத் திருக்கோவில்கள், சமய நிறுவனங்கள் மாறவேண்டும்.

"நடமாடக் கோயில் நம்பற்கொன் றீயிற்
படமாடக் கோயில் பகவற்க தாமே"

என்ற நெறியில் நடமாடும் மனித சமூகத்திற்குத் தொண்டு செய்யவேண்டும். மக்கள் திருக்கோவிற் பணிக்கு என்று தனி நேரம் – உழைப்பு நேரம் ஒதுக்க வேண்டும். ஊன் உருகும் உயிர் உருகும் தேனினும் இனிய தீந்தமிழ் மறைகள் திருக்கோவில்களில் முழங்கவேண்டும். அன்பை, நட்பை, காதலை, பண்பாட்டை கலாசாரத்தை வளர்க்கும் மையங்களாகச் சமய உலகம் மாறவேண்டும். நாத்திகம் நஞ்சு! நாகரிகப் பண்பாட்டு வாழ்க்கைக்கு ஏற்றதன்று; அதேபொழுது கடவுள் நம்பிக்கை மனித நேயத்திற்கு மாறாக இருப்பின் நாத்திகத்தினும் கொடிது.

"அப்பன்நீ அம்மைநீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமும் சுற்றமும் ஓரூரும் நீ"

என்று சகல உறவுகளும் கலந்த உயிர்ப்பு உறவினைச் சமய வாழ்க்கை கற்றுத்தரவேண்டும். விலங்கு உணர்விலிருந்து மனித சமூகத்தை விடுவித்துத் தேவநிலைக்கு உயர்த்துவதாய், வழிகாட்டுவதாய் நாளைய சமய உலகம் அமையவேண்டும். நேற்று, சமயம் அரசர்களின் சமயமாய் இருந்த காலத்தில் கூட மக்களுக்குரியதாய், மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்திருந்தது. இன்று சமயத்திற்கும் மக்களுக்கும் நீண்ட இடைவெளி. இன்னும் சிலரின் சமய நம்பிக்கை கடவுள் நாம் விரும்பியதைத் தரும் பரிசுச் சீட்டு என்று எண்ணுகின்ற மனோபாவம். இந்நிலை மாறிட மசயத்துறையில் மாபெரும் புனருத்தாரணம் அவசியம். ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தவற்றைக்கூட நினைத்துப் பார்க்க இயலாத நிலை. எனவே சமயத்துறையில் மார்ட்டின் லூதர் கிறத்துவ சமயத்தைப் புனருத்தாரணம் செய்ததைப் போல, புனருத்தாரணப் பணிகள், இளைய தலைமுறைக்கு காத்திருக்கின்றன. இன்று மதங்களுக்குள் சண்டைகள், வேறுபாடுகளைப் பெரிதுபடுத்தி, முரண்பாடுகளை உருவாக்கித் தமக்குள் முட்டி மோதி அழிகின்றனர்.

நாளைய சமயம் எப்படி இருக்கவேண்டும்? சமயம், சமூகத்திற்கே என்ற திசைநோக்கி நகரவேண்டும். நோயை ஆற்றாது பயன் இல்லை. நெறிப்படுத்தாக சமயம், சமயமும் அன்று; பண்பாட்டை, கலாச்சாரத்தை, நாகரிகத்தைப் பேணிக் காக்கும் நெறியே சமயம்! நாளைய சமயம் மனித நேயத்தை வளர்க்கவேண்டும். தொண்டின் உறைவிடமாக, நன்னெறி போற்றும் வகையில் நாளைய சமய உலகம் அமையவேண்டும்!

நாளை சமய உலகின் புனருத்தாரணம் அன்பால் வழிபடுவதே ஆகும்.

நாளை சமயம், மனிதகுலம் உய்யும் நெறி காட்டும் திசைநோக்கி நகரட்டும் வான்முகில் வாழாது பெய்து வளம் பெருகி, மேன்மைகொள் சமய நீதி உலகம் எல்லாம் விளங்கும் திசை நோக்கிப் பயணம் செய்வோம்.

குன்றக்குடி அடிகளார்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 81. பழைமை

பழைமை - பழகிய நட்பினைப் பாராட்டிப் பாதுகாத்தல் நட்பு அதிகாரத்தைத் தொடர்ந்து "பழைமை" வைத்ததன் நோக்கம் பழகிய நட்பை உடம்பில் உயிர் போலப் பாதுகாத்தல் வேண்டும் என்றுணர்த்துவதற்காகும். நட்பு அதிகாரத்தில் கூறப்பெறும் செய்திகள் பழைமை அதிகாரத்தில் கூறப் பெறும் செய்திகளுக்கு முரண்பட்டவையல்ல. வையகத்தில் பிழையேயில்லாத மனிதன் இல்லை. ஆனால் பகுத்துணர வேண்டும் குறை வேறு; குற்றம் வேறு. குறைகள் மன்னிக்கத்தக்கன; குற்றங்கள் மன்னிக்கத்தக்கன அல்ல. எந்தச் சூழ்நிலையிலும் துரோகம், ஏமாற்று முதலியன ஏற்புடையனவல்ல என்பதறிக.

பழைமை - பல தலைமுறைகள் பழகிய நட்பு என்று - அதாவது உழுவலன்பு நட்பு என்று கொள்க.

*பழைமை எனப்படுவது யாதுஎனின் யாதும்*
*கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.* (801)

பழைமை எனப்படுவது யாதெனக் கேட்பின், பழைமையுடையார் உரிமையால் செய்வனவற்றைச் சினவாது உடன்படுவதேயாகும்.

உணவு, மருத்துவம், ஒப்புரவாண்மை ஆகிய துறைகளில் இத்தகு செயல்கள் நிகழ வாய்ப்புண்டு.

*நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றுஅதற்கு*
*உப்பாதல் சான்றோர் கடன்.* (802)

சிறந்த நட்பிற்கு உறுப்பாவது நண்பர் உரிமையாகச் செய்த அனைத்திற்கும் உடன்பட்டு உவத்தலாகிய கடமையே.

பழகிய நண்பர் உரிமையால் செய்தனவற்றிற்கு உடன்பட்டு உவத்தல் நட்பிற்குரிய உறுப்பாகும்.

கர்ணனின் சோழி விளையாட்டை நினைவு கூர்க.

*பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை*
*செய்தாங்கு அமையாக் கடை.* (803)

பழகிய நண்பர் உரிமையால் செய்த காரியங்களுக்கு உடன்பட்டு நிற்காத பொழுது பழகிய நட்பு என் செய்யும்?

கெழுதகை நட்புடையார் செய்யுங் காரியங்களுக்கு உடன்பட்டால்தான் மேலும் நட்பினால் ஆகக்கூடிய காரியங்கள் நடக்கும் என்பது உணர்த்தியது.

*விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையால்*
*கேளாது நட்டார் செயின்.* (804)

பழகிய நட்புடையார் தம்மைக் கேளாது ஒரு காரியத்தைச் செய்யின் நட்பினால் பொருந்திய நலன் கருதி, கேளாது செய்த காரியத்தினையும் விரும்பி இருப்பர்.

இதனால், பழகிய நட்பெனினும் கேட்டுச் செய்தலே மரபு என்றுணர்த்தி, ஒரோவழி கேளாது நிகழினும் பொறுத்துக்கொள்க என்று அறிவுணர்த்தியது.

*பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுஉணர்க*
*நோதக்க நட்டார் செயின்.* (805)

தம்முடைய பழகிய நண்பர் தாம் நோதற்குரிய செயல்களைச் செய்வாராயின் அதற்குக் காரணம் நட்பின் வழிவந்த உரிமை அல்லது அறியாமை என்று கருதி வாளா இருந்திடுக.

முன் அதிகாரத்தில் "பேதையர் நட்பு" கைவிடுக என்றார். இங்குப் பேதைமை என்று கருதிப் பொறுத்துக் கொள்க என்கிறார். இவற்றிற்கிடையில் முரண்பாடு இல்லை. இங்குப் "பெருங்கிழமையுடையோர் கேண்மை" என்பதறிக.

*எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்*
*தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.* (806)

பழைமை நலஞ்செறிந்த நட்பின் எல்லை வரையில் நின்று பழகியவர்கள் கேடுற்ற பொழுது நின்றார் தொடர்பினை நீக்கமாட்டார்கள்.

"ஆழ்மான நட்பு" என்றும் நீங்காது.

*அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்*
*வழிவந்த கேண்மை யவர்.* (807)

அன்பின் வழிவந்த் பழைமையான நட்பு நலம் செறிந்த உறவினையுடையார் தமது நண்பர் அழிந்து போகக் கூடிய அளவு துன்பம் செய்யினும் அன்பிலிருந்து நீங்க மாட்டார்.

நட்பு நலஞ்சான்ற உறவு, அழிவினை ஈடு செய்யும் என்பதறிக.

*கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு*
*நாளிழுக்கம் நட்டார் செயின்.* (808)

தம்மொடு பயின்ற நண்பன் தவறு செய்ததைப் பிறர் வாயிலாகக் கேளாத பெருந்தன்மை உடையவருக்குப் பழகுபவர் பிழை செய்யும் நாட்கள் குறையும்.

"நாளிழுக்கம் நட்டார் செயின்" என்றதால் பழகிய நண்பரிடத்தில் பிழைகள் செய்த நாளிலிருந்து நாள்கள் பழுதாகின்றன. முன்பு பழகிய நாட்களும் கூடப் பயனற்றுப் போகும் என்றுணர்த்தியதாகக் கொளல் சிறப்பு.

நட்பால் பழகும் இருவருக்குமிடையில் மூன்றாவது மனிதரை அனுமதிப்பது நட்பைக் கெடுக்கும்.

*கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை*
*விடாஅர் விழையும் உலகு.* (809)

உறவுகளுக்குக் கேடின்றிப் பழகி வந்த நட்புறவினை விடாது பேணுபவர் நட்பை உலகம் விரும்பும்.

பழகிய நட்பில் ஓரிரண்டு பிழைகள் இருப்பினும் நட்பைக் கைவிடாததே அழகு என்றுணர்த்தியது.

*விழையார் விழையப் படுப பழையார்கண்*
*பண்பின் தலைப்பிரியா தார்.* (810)

பழகிய நட்புடையார் தவறுகளே செய்தாராயினும் பழகும் பண்பினின்றும் நீங்காதவர்கள் நட்பைப் பகைவரும் விரும்புவர்.

நட்பு முதன்மைப்படுத்தப் பெற்ற இடத்தில் பொருளால் நட்பைப் பிரிக்க இயலாது.

(தொடரும்)

தோழமை வாழ்க்கைதான் அன்பை உருவாக்கும்! ஆற்றலைப் பெருக்கும். பகை உணர்வை நீக்கும்! பேதங்களைச் சேதப்படுத்தும்! அழுக்காற்றை அழித்து ஒழிக்கும்!

**– பொன்னம்பல அடிகளார்**

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# திருக்கோயில் பூசனை எல்லாரும் செய்யலாமா? - ஓர் ஆய்வு

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

சிதம்பரத்தில் ஆடவல்லான் திருக்கோயிலில் சிவாகமவழிக் கிரியைகளைச் செய்து மந்திரங்களை ஓதி, திருவிழாவிற்குக் கொடி ஏற்றினார்கள். ஆனால் கொடி ஏறவில்லை உமாபதிசிவம் செந்தமிழில் கொடிக்கவி பாடி ஏற்றுவித்து அருளியமை நாடறிந்த செய்தி. திருக்கோயில் தேரை ஓட்டி நிலை நிறுத்திய பெருமை, திருப்பல்லாண்டுக்கு உண்டு. ஆதலால் ஆகமங்களினும் திருமுறைகள் அருள்நலஞ் செறிந்தன; வலிமையுடையன; போற்றுதலுக்குரியன; பயன்தரத்தக்கன என்பது பெறப்படும் உண்மையல்லவா? ஆதலால் சிவாகமங்களிலும் போற்றிப் பின்பற்றுதலுக்குரியன திருமுறைகளும் மெய்க்கண்ட சாத்திரங்களும் என்பது விளக்கமுறுகிறது. எனவே மெய்கண்ட சாத்திரங்களுக்கும், திருமுறைகளுக்கும் மாறுபடாத சிவாகமங்களே ஏற்புடையன. மாறுபாடு உளதாயின் திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள் இவற்றின் கருத்துக்களே ஏற்று ஒழுகத் தக்கன.

"சிவாகமங்களுக்குச் சிவாசாரியார்கள் மட்டுமே அதிகாரிகள் அல்லர். சிறப்புடைய உத்தமர் அனைவரும் சிவாகமங்களுக்கு உரிமையுடையவரே என்று சமய நெறியும்[16] யாழ்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரின் இரண்டாம் சைவ வினாவிடையும்[17] எடுத்தோதுகின்றன.

சைவ சமயத்தில் சிவாசாரியார்களுக்கு இருக்கிற முக்கியமான இடத்தை நாம் அறிந்து பாராட்டி நடைமுறைப்படுத்தவே விரும்புகின்றோம். ஆனாலும் "அவர்கள் சிவாசாரியார்களாகவே பிறக்கிறார்கள்" என்பது பொருத்தமன்று. சிவாசாரியார்கள் சிவபெருமானால் சிவாசாரியர்களாக பிறப்பிக்கப்பட்டுள்ள "சிவசிருட்டி" என்பதும் பொருத்தமன்று. இக்கருத்துக்கள் தத்துவ இயலுக்கு முரண்பட்டவை. "சிவசிருட்டி" என்பதற்குப் பொருள் சிவனாலேயே நேரிடையாகப் படைக்கப்பட்டவர் என்பது அன்று. மாயாகாரியப் படைப்பைச் சிவம் நேரிடையாகச் செய்வதில்லை. சிவம் திருவுள்ளம் பற்ற, அக்குறிப்பின்படி பிரம்மா

சிருட்டிப்பதென்பதே சிவசிருட்டியின் விளக்கம். சிவத்தின் திருவுள்ளக் குறிப்பின்படி படைக்கப்படும் படைப்பு, தொன்மைக் காலத்தில் சிறந்த முதற் குடிக்கே அந்த இயல்பு பொருந்தும். அடுத்து வரும்பொழுது அசுத்த மாயையில் சேர்ந்த படைப்புக்களேயாம். ஆதலால் இன்றுள்ள சிவாசாரியார்களும், சிவாசாரியார்களாகவே பிறக்கிறார்கள் என்று கூறுவது தத்துவ இயலுக்கு முரணானது. ஆயினும் வழிவழியாகப் பெருமானுக்குப் பூசை செய்யும் குடி மரபில் வருவதால், அருணந்திசிவம் கூறும் நற்சார்பு இயல்பாகக் கிடைப்பதால், சிவாசாரியார் குடியில் தோன்றுபவர்களைச் "சிவசிருட்டி" என்று கூறுவது உலகியல் வழக்கு. ஆயினும் சிவாகமங்களைக் கற்காமலும், தீக்கை முதலியன செய்து கொள்ளாமலும், தீக்கை செய்து கொண்டு அதற்குரிய அனுட்டானங்களை முறையாகக் கடைப்பிடிக்காமலும் வழி வழியாக இருந்து வருகின்றவர்களும் பிறப்பிலேயே சிவாசாரியார்கள் ஆகிறார்கள் என்கிற செய்தி ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று.

ஏழு வயதில் சமய தீக்கை பெற்று, சிவாகமங்களை முறையாகக் கற்கத் தொடங்கி, விசேட தீக்கை, நிர்வாண தீக்கை, ஆச்சாரியாபிடேகம் முதலியவற்றை உரிய - அந்தந்த வயதுகளில் பெற்று, பெற்ற தீக்கைகளுக்கு ஏற்றவாறு, ஒழுகி, முறைப்படி தகுதி பெற்றவர்களே சிவாசாரியார்களாகிறார்கள். சிவாகம முறைப்படி ஒரு தீக்கைக்கும் பிறிதொரு தீக்கைக்குமிடையில் பன்னிரண்டு ஆண்டுகள் கடந்துவிடக் கூடாது என்ற நியதி இருக்கிறது.

திருக்கோயில் வழிபாட்டில் ஆன்மார்த்தம், பரார்த்தம் என்று இரண்டு பூசைகள் உள்ளன. ஆன்மார்த்தம், பரார்த்தம் என்ற பூசைகள் இரண்டும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியிடத்தில் செய்யப் பெறுவனவேயாம். பூசை செய்யும் இடத்திலும் மூர்த்தியிலும் வேறுபாடில்லை. செய்யும் நோக்கத்தைப் பொருத்தே ஆன்மார்த்தம் பரார்த்தம் என்று வேறுபடுகின்றன. சிவாசாரியார்கள் திருக்கோயிலுக்குள் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியை ஆன்மார்த்தமாகவும் வழிபடலாம். ஆன்மார்த்தமாக வழிபாடு செய்து கொள்ள இயலாதவர்களுக்காகவும் பொதுவாக எல்லா உயிர்களுக்காகவும் வழிபாடு செய்து வைக்கும் உரிமையுடையவர்கள் சிவாச்சாரியார்கள். இதுவே பரார்த்த பூசை எனப் பெறும்.

சைவ முறைப்படி பரார்த்தமாக மூர்த்தியைத் தீண்டுதற்குரிய தகுதி தருவதாகிய தீக்கை முதலியன முறையாகப் பெற்றவர்கள். திருக்கோயிலில்

எழுந்தருளியிருக்கும் மூர்த்தியை ஆன்மார்த்தமாக வழிபாடு செய்து கொள்ளலாம். இதுதான் தமிழகத்துத் திருக்கோயில் வழிபாட்டுப் பழைய நெறிமுறை. இதனை "தீக்கை பெற்றுக் கொண்டவர்கள் அனைவரும் திருக்கோயில்களில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற வழிபாட்டுக்குரியவர்கள்"[18] என்று யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் சைவ வினா விடையில் கூறியுள்ளமை அறிக.

திருவீழிமிழலைத் திருக்கோயிலில் "செந்தமிழர்கள் மறை நாவலர்கள், கலைநலம் தெரிந்தவர்கள், குணத்திற் சிறந்த ஞானிகள் ஆகியோர் ஒருங்கூடி அர்ச்சனைகள் செய்தனர்"[19] என்று திருஞான சம்பந்தர் தேவாரம் கூறுகிறது.

திருப்பழுவூர்த் தேவாரத்தில் மலையாளிகள் கூட வந்து வழிபட்டதாகத்[20] திருஞான சம்பந்தர் அருளிச் செய்துள்ளார்.

அப்பரடிகள் திருவையாற்றுப் பதிகத்தில் "திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபட அடியார்கள், புனலும் பூவும் சுமந்துகொண்டு ஒருவர் பின் ஒருவராகச் சென்று புகுந்ததையும் அவர்கள் பின்னே, வந்த ஒழுங்கு வரிசையில் தாமும் செல்வதையும் குறிப்பிட்டு அருளிச் செய்துள்ளார்.[21]

ஆதலால், திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைத் தகுதியுடைய அடியார்கள் அனைவரும் புனலும் பூவும் சொரிந்து வழிபாடு செய்து கொண்டமையை அறியலாம்.

அடுத்து, சேக்கிழார் அருளிச் செய்த பெரிய புராணமும் இந்த உண்மையை உணர்த்துகிறது. திருச்சாத்தமங்கையில் வாழ்ந்த திருநீலநக்கநாயனார் என்ற மறையவர் குலத்துப் பெரியவர், நாள்தோறும் தமது மனைவியுடன் திருச்சாத்தமங்கையில் பதிகம் பெற்ற அயவந்தீச்சுரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்தும் திருவமுது செய்வித்தும் வழிபாடு செய்து கொண்டமையை பெரிய புராணம் கூறுகிறது[22].

அடுத்து வேளாளர் குடியைச் சேர்ந்த அரிவாட்டாய நாயனார் நாள்தோறும் திருக்கோயிலுக்குள் எழுந்தருளியுள்ள பெருமானுக்குச் செந்நெல் அரிசித் திருவமுதும், மாவடுவும், செங்கீரையும் எடுத்துச் சென்று திருவமுது செய்விக்கும் கடப்பாட்டினையுடையராயிருந்தனர் என்றும் பெரியபுராணம் கூறுகிறது.[23]

## இக்கட்டுரையில் வரும் எண்களுக்குரிய விளக்கங்கள்

16. உத்தம ராவார் அவர்தமுள்ளும் சிறப்புடைய
உத்தமரே நாற்குலத்துள் ளோர்.
(மறைஞான சம்பந்தர் - சைவ சமய நெறி, ஆசாரியர் இலக்கணம் குறள்.2)
இக்குறளுக்கு யாழ்ப்பாணத்து நல்லூர் நாவலர் பெருமான் உரை விளக்கமும் காண்க.

17. சைவ வினாவிடை இரண்டாம் புத்தகம் - வினா விடை. 88

18. சைவ வினாவிடை இரண்டாம் புத்தகம் - வினா விடை 206.

19. *செந்தமிழர் தெய்வமறை நாவர் செழு*
*நற்கலை தெரிந்த அவரோடு*
*அந்தமில்கு ணத்தவர்கள் அர்ச்சனைகள்*
*செய்ய அமர்கின்ற அரனூர்*
*....வீழி நகரே*

(மூன்றாம் திருமுறை. 80 திருவீழி மிழலை. 4)

20. *அந்தணர்களான மலை யாளரவரேத்தும்*
*பந்தமலிகின்ற பழுவூர்....*

(இரண்டாம் திருமுறை-34. திருப்பழுவூர்.1)

21. *மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்*
*போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர் பின் புகுவேன்?*

(நாலாம் திருமுறை-திருவையாறு-1)

22. *1. ஆய்ந்த மெய்ப்பொருள் நீரென வளர்க்கும் அக்காப்பில்*
*ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளார் இருபிறப்பாளர்*

நீந்து நல்லறம் நீர்மையின் வளர்க்கும் அத்தீயை
வாய்ந்த கற்புடன் நான்கென வளர்ப்பர்கள் மடவார்"

2. சீலமுய்த்த அத்திரு மறையோர் செழுமூதூர்
ஞாலம் மிக்க நான்மறைப் பொருள் விளக்கிய நலத்தார்
ஆலம் வைத்த கண்டத்தவர் தொண்டராம் அன்பர்
நீல நக்கனார் என்பவர் நிகழ்த்துளா ரானால்

3. வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து
பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே
காதலால் அவை இரண்டுமே செய்கருத்துடையார்.

4. மெய்த்த ஆகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமும் செய்தே
அத்தர் அன்பருக்கு அமுது செய்விப்பது முதலா
இத்திறத்தன பணிகளும் ஏற்றெதிர் செய்வார்.

5. ஆய செய்கையில் அமருநாள் ஆதிரை நாளில்
மேய பூசனை நியதியை விதியினால் முடித்துத்
தூய தொண்டனார் தொல்லை நீடயவந்தி அமர்ந்த
நாயனாரையும் அருச்சனை புரிந்திட நயத்தார்

(பெரியபுராணம்...1835-1839)

23.அ. மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெல் இன்னமுதோடு செங்கீரையும்
மன்னு மைந்துணர் மாவடுவும் கொணர்ந்து
அன்ன என்றும் அமுது செய்விப்பரால். (பெரிய புரா.913)

ஆ. நண்ணிய வயல்கள் எல்லாம் நாடொறும் முன்னர் காண
வண்ணவார் கதிர்ச் செஞ்சாலி ஆக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலார் அறுத்த கூலிகொண்டு "இஃது அடியேன் செய்த
புண்ணியம்" என்று போத அமுது செய்விப்பாரானார்

(பெரிய.புரா. 918)

(தொடரும்)

# திருநீறு நீராட்டுப் பொருள் அன்று

(பேராசிரியர். **ஆ. சிவலிங்கனார்,** மயிலம்)

இறைவனுக்கு முறையாக நீராட்டுச் செய்யப் பயன்படும் பொருள்கள் பின்வருவன.

நல்லெண்ணெய், ஆன்ஐந்து, பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கரும்புச்சாறு, பழச்சாறு, இளநீர், சந்தனக்குழம்பு, குடநீர் (ஸ்தபநம்) என்பனவாம்.

இப்பொருள்களைக் கொண்டு மாயை என்பவள் இறைவனுக்கு நீராட்டுச் செய்தாள் என்பது பிரபுலிங்க லீலை கூறுவது.

"தயிலமுடன் ஆனிடத்தைந் தையமுது
நறுநெய் பால்தயிர் செழுந்தேன்
வயலின்எழு கரும்புடைத்துக் கொள்சாறு
பழம்பிழிந்த மதுச் சாறு
புயலளவு தாழை யிளநீர் நறுஞ்சந்
தனக்குழம்பு போற்றுநூலின்
இயலின்ஃமை தபனம்இவை யொன்றன்பின்
ஒன்றுமுறை யிறைவற் காட்டி"

(பிரபுலிங்கலீலை. மாயை பூசைகதி 43) என்பது பாடல். இதில் திருநீறு கூறப்படவில்லை. நல்லெண்ணெய் பூசியபின் நீரால் அதைக் கழுவுதல் உண்டு. இப்படியே ஒவ்வொன்றையும் இறைவனுக்கு முறையே சார்த்தி நீரால் உடனுக்குடன் அவற்றைப் போக்குதல் உண்டு. இதனால் தைல முதல் பொருள்கள் சார்த்தப்பட்டுப் போக்கப்படுவன என்பது புலப்படும். ஆனால் திருநீறு சார்த்தப்படின் அது போக்கப்படுவதற்கு உரியதன்று.

பிரபுலிங்க லீலையில் இவ்வாறு கூறிய சிவப்பிரகாச சுவாமிகள் இஷ்டலிங்க அபிஷேக மாலையிலும் இவ்வாறே இறை நீராட்டுக் கொள்ளும் முறை கூறியுள்ளார்.

"நல்லதில நெய்பாடி யானிடத் தைந்தாடி
நவையில் ஐயமுதம் ஆடி
நல்குகா ரணகாரிய முறையில் அன்றியே
நறுநெய் பால்தயிர் ஆடியே

மெல்லமலர் மதுவாடி யின்கழைச் சாறாடி
மென்குழச் சாறாடியே
விழையுமிள நீராடி யாரக் குழம்பாடி
விழியிளமை நானம் ஆடி...... அபிடேகம் ஆடியருளே"

(இட்டலிங்க அபிடேக மாலை 9) இப்பாடலிலும் நீராட்டு பொருளாகத் திருநீறு கூறப்படவில்லை. ஏன்?

திருநீறு இறைவன் உறையும் கோட்டைகளுள் அதாவது பாதுகாப்புகளுள் ஒன்று. விபூதி, உருத்திராக்கம், பஞ்சாட்சரம், குரு, லிங்கம், சங்கமம், பாதோதகம் பிரசாதம் என்பன அட்டாவரணம் (பாதுகாப்புக் கோட்டை) எனப்படும்.

இறைவன் கோட்டை, காப்பு அழிக்கப்படற்கு உரியதன்று. அதனால்தான் ஞானசம்பந்தர் மந்திரமாவது நீறு என்றவர் துதிக்கப்படுவது நீறு என்றார். இறைவன் பூசுவதும் வெண்ணீறு என்றார் மாணிக்கவாசகர்.

நீராட்டுப் பொருள்கள் யாவும் நீராட்டுச் செய்யும் போதே கழுவி நீக்கப்படுவனவாதலின் திருநீறு நீராட்டு பொருளில் சேர்க்கப்படவில்லை. திருநீறு முத்திச் சாதனம். முத்தி தருவது நீறு என ஞானசம்பந்தர் கூறியதும் காணலாம்.

சில திருக்கோயில்களில் விபூதி அபிடேகம் நடத்தப்படுகின்றது. இது தவறு.

கூட்டுறவு ஒரு வாழ்க்கைத் தத்துவம்; ஒரு வாழ்க்கை முறை. மனித குலத்தின் மேம்பாடு கூட்டுறவின் மூலம்தான் நிகழ முடியும். கூட்டுறவு மனித குலத்தை அகநிலையிலும், புறநிலையிலும் வளர்த்துச் செழுமைப்படுத்தி வளர்க்கும். இந்திய நாட்டில் சோசலிச சமுதாயத்தை – பொதுவுடைமைச் சமுதாயத்தைக் கூட்டுறவின் மூலமே அமைக்கமுடியும். இந்த மகத்தான சாதனையைக் கூட்டுறவின் மூலம் சாதிக்க வேண்டும் என்றால் கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவுச் சிந்தனையை நிறைய வளர்த்து நமது மக்களை இயல்பான கூட்டுறவாளர்களாக வாழப் பழக்கவேண்டும். ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பது அறம். ஒழுக்கம், கடமை, தவிர்க்க இயலாதது என்ற கொள்கையை மக்கள் தங்களுடைய வாழ்க்கையின் கொள்கையாக ஏற்றுக் கொள்ளும்படி செய்யவேண்டும்.

**– தவத்திரு குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை (தொகுதி –13)**

## திருவண்ணாமலையில் ஆதீனக் குருமுதல்வர் குருமூர்த்தத்தின் அருகில் வேட்டவலம் பேருந்துச் சாலையின் ஒருமருங்கில் கிடக்கும் பலகைக் கற்களில் உள்ள கல்வெட்டு வாசகம்

(படித்துப் படியெடுத்தவர். டாக்டர். **இரா. கலைக்கோவன்**)

படித்த நாள் : 2.9.1990

### முதற்கல்வெட்டு

கல்வெட்டுப் பலகையின் தலைப்பில் இரட்டைமலையும் சூரியன் சந்திரனும் உள்ளன. ஆண்டு. கி.பி. 1687.

| | |
|---|---|
| 1. சொஸ்த்த | 2. ஸ்ரீமன் சாலி |
| 3. யவாகன சக | 4. ாற்த்தம் 160 |
| 5. 9 கலியாண்டு | 6. 4788 இ |
| 7. து மேல் செல்லா | 8. நின்ற அஷ்தய வருடம் |
| 9. தை யி மீ... | 10. வம் உத்திராட ந |
| 11. க்ஷத்திறம் கூடி | 12. ன சுப தினத்தில் |
| 13. திருவண்ணாமலை | 14. ஆதீன தெய்வ சி |
| 15. காமணி பண்டா | 16. ர சன்னதி அவர் |
| 17. கள் சிஷன் அரு | 18. ணாசல தம்பிரா |
| 19. ன் மடம் அது | 20. க்கு சேர்(ப்)பு |
| 21. நிலம் மேற்படி | 22. மடத்தில் லி |
| 23. ருந்துக்கொ | 24. ண்டு சிவா |
| 25. ல(யி)ங்களில் | 26. யாகங்க |
| 27. ள் கோபுற | 28. யாகங்க |
| 29. து கொண் | 30. டு இருந்தே |
| 31. தனக்குரிய | 32. து மடமும் உ |
| 33.34. சிதைந்துள்ளது | |
| 35. தருகுறது | 36. சிவமயம் |

### இரண்டாம் கல்வெட்டு

கல்வெட்டுப் பலகையின் தலைப்பில் இரட்டைமலை, சூலம், இலிங்கத் திருமேனி உள்ளன.

| | |
|---|---|
| 1. ஸ்ரீமுகசி | 2. தெய்வசிகா |
| 3. மணி | 4. பண்டாரத்தி |
| 5. ன் மடத்துக்கு | 6. கறித்தோட்டம் |
| 7. விட்டது | 8. சதிரபதி |

# அருளாலய குயில் பத்து

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி)

1. *குன்றக் குடிக்குயிலே! கூறுன் தலைவன்யார்?*
*அன்றுமண்டைக் காட்டில் அவர்தலைக்கு - ஒன்றுகூடிச்*
*சில்லோர் விலைபகரச் சென்ற சிவத்துணிச்சல்*
*நல்லோராம் எம்அடிகள் தாம்.*

2. *குமரன்வாழ் குன்றக் குடிக்குயிலே! உந்தன்*
*தமரான நல்அடிகள் தாமும் - அமரராய்*
*ஆனதும் அன்னவரின் வாரிசாய் வந்தார்ஆர்?*
*மானமிகு பொன்னம் பலர்.*

3. *குன்றில், குயிலே! குவலயம் போற்றும்*
*குன்றக் குடிஅடிகள் கொள்கைஎன்? - நின்றபுகழ்*
*மக்கள் திருமடத்தின் மாண்பார்ந்த சொத்தென்று*
*தக்கவாறு சொன்னதுவே தான்.*

4. *குவலயம் போற்றும் குயிலே! உரைநீ;*
*தவலரும் குன்றக் குடியில் - அவலுறும்*
*மாந்த இனத்தை மதிப்படையச் செய்ததெது!*
*ஏந்துபுகழ் நம்அடிகள் தொண்டு.*

5. *குயிலே! குமரனைக் கும்பிடும் நும்மின்*
*மயில்மலை குன்றக் குடியில் - பயில்அடிகள்*
*கொண்ட சமயமெது? சிந்தைமகிழ் சித்தாந்த*
*பண்டுபுகழ் சீர்சைவ மே!*

6. *மொழியாய் குயிலேநீ! குன்றக் குடியைத்*
*தொழில்மயம் செய்தார் தொழிலென்? - ஒழிவின்றி*
*ஊருக் குழைத்தலே யோகமென்ற பாரதியின்*
*தேருரையே அன்னார் தொழில்!*

7. மயில்மலை வாழ்குயிலே! மாண்பார் அடிகள்
உயிலாய் உரைத்தஉப தேசம்? - பயில் வாழ்வில்
தேடும் பொருள்போல் பொருளான வாழ்க்கையை
நாடும் படிவாழ் நனி.

8. மயில்விளை யாடும் மலைவாழ் குயிலே!
அயில்வேல் முருகன் அடிகள் - பயிலுறவென்?
கூறும் கணியன்பூங் குன்றனார் சங்கத்து
வீறுதமிழ் ஊரே உறவு.

9. எயில்நீண்ட குன்றக் குடிக்குயிலே! உந்தன்
மயிலாண்ட சேயோன் அடிகள் - வெயில்போல்
பரிந்த துறவின் விளக்கமென்? பாரில்
விரிந்த உறவே துறவு.

10. கூவும் கருங்குயிலே! கூறுன் அடைக்கலத்தை!
மேவுதமிழ் மாமுனிவர் வாழ்கின்ற - தேவுபுகழ்
கந்தன் குடியானை குன்றக் குடியுள்ள
எந்தன் அருளா லயம்.

---

## நேருஜி நினைவு



டெல்லி தமிழ்ச்சங்கம் ஏற்பாடு செய்திருந்த பாரதி விழா அது. நேரு தொடங்கி வைத்தார். நான் தலைமை தாங்கினேன். அதன்பிறகு நம் மாவட்டத்துக்கு ஒரு முறை வருமாறு அழைப்பு விடுத்திருந்தேன். பள்ளிக்கூட விழாவுக்கு வந்திருந்தார். பொதுவாகவே "பொலிட்டிகல் எகானமி" விஷயத்தில் அவரைத்தான் நான் மிகவும் அட்மயர் செய்வேன். லெனின், மார்க்ஸ், விவேகானந்தர், திருவள்ளுவர், அப்பர் சுவாமிகள் இவர்களுக்கு அடுத்தபடி எனக்கு நேருதான் வழிகாட்டி.

**- அருள்நெறித்தந்தை**

# திருமுறைகளின் "மந்திரத் தன்மை"

20, 21-08-2007 தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கலையில் நிகழ்ந்த
திருமுறைக் கருத்தரங்கில் வாசித்த கட்டுரை

(முனைவர். **சு. சந்திரா,** மதுரை)

திருஞானசம்பந்தர் முதலாகச் சேக்கிழார் ஈறாக அமைந்த இருபத்தேழு அருளாளர்களின் வாக்குகள் பன்னிரு திருமுறைகளாக விளங்குகின்றன. அத்திருமுறைகளின் மந்திரத் தன்மை பற்றியதாக இவ்வரைவு அமைகின்றது.

**திருமுறைகள்**

தொகையால் பன்னிரண்டு எனவும், இயற்றிய அருளாளர்களின் எண்ணிக்கையால் இருபத்தேழு எனவும் நூல்களின் எண்ணிக்கையில் நாற்பது எனவும் பாடல்களின் எண்ணிக்கையில் பதினெண்ணாயிரம் எனவும் பரந்து கிடந்த அருளனுபவப் பாக்கள் அனைத்தும் "திருமுறைகள்" எனப்படுகின்றன.

திருமுறைகள் குறிப்பிட்ட காலகட்டத்தில் வாழ்ந்த சமுதாயத்தின் வாழ்வியலையும், அறவியலையும், மக்களது நம்பிக்கையையும் தெளிவுறுத்துவன ஆகும். இதனை "திருமுறைகள் அருளனுபவ வாக்குகள் மட்டுமே எனக்கொள்வதோடு அவை வாழ்வியல் நூலாகவும் விளங்கும் தன்மையுடைத்தாதல் காரணத்தால் காலந்தோறும் அவைகளை ஆய்ந்து, ஆய்ந்து தோய்ந்து தோய்ந்து அனுபவித்துணர்ந்த் சான்றோர்கள் அவ்வச்சிறப்புகளையெல்லாம் எடுத்துக்கூறி வந்துள்ளனர்" (இரத்தினசபாபதி. வை. திருமுறைப்பெருமை, பக்.1-2) எனக் கூறுவது எண்ணத்தக்கதாகும்.

**மந்திரங்களா**

மொழியில் அமையும் அனைத்து இலக்கியங்களையும் வழிபடற்கு உரியனவாக மக்கள் கருதுவதில்லை என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. ஒரு சமுதாயத்தின் விடுதலையைக் கொணருகிற - மக்கள் கூட்டத்துக்கு உரிமையூட்டுகிற - மொழி வளர்ச்சிக்கு வித்திடுகிற - மன்னர் புகழைப் பறைசாற்றுகிற - மக்கள் பிரச்சனையை விவரிக்கின்ற படைப்புகள் ஒவ்வொரு மொழியிலும் இருக்கலாம். ஏன், தமிழ்மொழியில் பாரதியின்

பாடல்கள், தொல்காப்பியம், சங்கப் பாடல்கள், பாரதிதாசன் பாடல்கள் எனப் பலதரப்பட்ட இலக்கியங்கள் உண்டு. இவையெல்லாம், மக்களால் போற்றப்படுகின்றன; வழிபடப்படவில்லை என்பதனை நினைவில் கொள்ளவேண்டும்.

ஆயின், இருபத்தேழு அடியார்கள் பாடிய இந்தப் பாடல்களை மட்டும் ஏன் வழிபடவேண்டும்? வழிபாட்டிற்குப் பயன்படுத்த வேண்டும்? என்ற வினாக்களுக்கான விடையைக் காண முற்படுகிறது இவ்வரைவு.

**மந்திரங்களின் தோற்றம் :**

மந்திரத்தின் தோற்றம், அதன் செயல்முறைகள் பற்றிப் பல்வேறு அறிஞர்களும் ஆய்ந்துள்ளனர். அவற்றுள் பிரேசரது (J.G. Frazer) கருத்துக்கள் குறிப்பிடத்தகுந்தவை ஆகும்.

பழங்காலத்தில் மக்கள் இயற்கையின் பேராற்றல் முன்னும், ஏதறியா ஆற்றல்களின் முன்னும் தங்களைக் காத்துக் கொள்ள சில சொற்களை உச்சரித்தனர். அவை காலப்போக்கில் மந்திரம் எனப்பட்டன. "மந்திரம்" என்பது மறைபொருளான ஆவிகள், கடவுள்கள் பற்றிய கொள்கையன்று; மாறாக, இயற்கைப் பொருள்கள், விலங்குகள், மனிதர்கள் உள்ளிட்டவைகளில் பொதிந்துள்ள ஏதறியா ஆற்றல்கள் பற்றிய மனிதனின் கற்பனையாகும்" (சந்திரா.சு. பழந்தமிழில் தொன்ம வகைமை வளர்ச்சி, ப.27) எனக் கூறினர். மந்திரங்களை மனித விருப்பங்களுடன் இணைத்துத் தொன்மங்களுடன் தொடர்புபடுத்தினர். இத்தொன்மங்கள் சமயக் கோட்பாட்டு வளர்ச்சிக்கு உதவின (Chase Richerd Notes on the study to Myth. P.247) எனலாம்.

தொல்பழங்கால மக்களின் தொழில்நுட்பப் பற்றாக்குறையைப் போக்கத் தோன்றிய கற்பனைத் தொழில் நுட்பமாக மந்திரம் கூறப்படுகிறது. ஆயினும், காலப்போக்கில் இவை சமயச்சடங்குகளிலும் மதத்திலும் பிரிக்கவியலாத கூறாகிவிட்டன.

வளர்ந்த சமயங்களில் மந்திரங்கள் என்பவை ஆற்றல் வாய்ந்தவை. பாவனைச் சடங்குகளுக்கு ஏற்றபடி உச்சரிக்கக்கூடிய ஒலிக் குறிப்பாக அன்றி, மொழிசார்ந்து வளர்ந்தன எனலாம். இவ்வளர்ச்சி சமய வளர்ச்சியோடு இணைந்தது. அந்த வகையில் தமிழ்மொழி மந்திரங்களைப் பற்றி என்ன பேசுகிறது எனக் காணலாம்.

## மறைமொழி

மந்திரங்களை மறைமொழி என்பர் பழந்தமிழர். மறைமொழி எனில், நேரடிப் பொருள் மட்டுமல்லாது, மறைவாக – செறிவாக உள்ள பொருளையும் குறிக்கும் எனலாம். "புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் எல்லாம் மந்திரம் எனப்படும்" என்பார் பேராசிரியர். இதனையே சேனாவரையரும் உரைக்கின்றார். (வெள்ளைவாரணன், உ.ஆ.) செய்யுளியல். ப. 272).

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ற சொல்லதிகார நூற்பாவிற்கு, உரை சொல்லும் சேனாவரையர் சைவசித்தாந்தத்தைத் துணைக்கு அழைக்கிறார்.

ஆன்மா அறியுந் தன்மையுடைய சித்துப்பொருள். இதனை அறிய விடாமல் ஆணவம் என்ற அறியாமையாகிய இருள் அழுத்துகிறது. இந்த இருளைப் போக்க வேண்டும். அதற்காக இந்த உலகை இறைவன் படைக்கிறான். இந்த உலகை மாயை என்னும் உள்பொருளில் இருந்து படைக்கின்றான். மாயை என்பது அவித்தை, சுத்த மாயைக்குப் பெயர் விந்து. அதிலிருந்து எழுத்தை உருவாக்குகிறான் இறைவன். அதிலிருந்து சொல் உருவாகிறது. அதிலிருந்து மந்திரம் உருவாகிறது. அதாவது, சுத்த மாயையிலிருந்து (விந்து) எழுத்து (வன்னம்) சொல் (பதம்), மந்திரம் (மந்திரம்) ஆகிய மூன்றும் உருவாகின்றது. இம்மூன்றும் சேர்த்து "சொல் உலகம்" என்பர். சொல்லினாலே, ஆக்கப்பட்ட உலகம். அதாவது மாயையிலிருந்து சொல்லினால் ஆக்கப்பட்ட உலகம். அது சூக்குமமானது. நம் கண்ணுக்கு புலப்படாமல் ஒலி வடிவில் இருப்பது. இந்தச் சொற்களைக் கொண்டு தூலமாகப் படைத்தது பொருள் உலகம். அதுதான் கலை, தத்துவம், புவனம் என்று மூன்றாக விரிந்து தூய உலகமான பொருள் உலகமாயிற்று. ஆகவே மாயையில் ஒரு பகுதி சொல்லுலகமாக இருக்கிறது. இன்னொரு பகுதி பொருள் உலகமாக இருக்கிறது. இரண்டும் ஒன்றில் இருந்துதானே வந்தது. எனவே ஒன்றுக்கு ஒன்று தொடர்பு உண்டு. அதாவது, உலகத்தில் உள்ள அனைத்துப் பொருள்களையும் குறிப்பிட்டுச் சொல்ல சொல்லை வைத்தான். அந்தச் சொல்லின் மூலம் அறிவை விளங்கவைத்தான். இந்த அடிப்படையில், "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

## நிறைமொழி மாந்தர் கூற்று :

சொல்லுக்கும் பொருளுக்கும் தொடர்பு இருப்பினும், அதனை அறிந்து முழுமையான தொடர்பு கொள்ளும் வகையில் சொல்லோடு

பொருளை இணைக்கும் நிலை வேண்டும். இதனையும் தொல்காப்பியர்,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என உரைக்கின்றார். செய்யுளியலில், உள்ள இந்தச் சூத்திரத்திற்கு, உரையாசிரியர்கள் பலரும் உரை கூறுகிறார்கள்.

"நிறைமொழி மாந்தர்" என்பதற்கு "வல்லார்" எனப் பொருள் கூறுகின்றனர் உரையாசிரியர்களாகிய இளம்பூரணரும் பேராசிரியரும்.

"சொல்லில் சொலலின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையார்" என்பார் நச்சினார்க்கினியர்.

"நிறைமொழி மாந்தர்" - யான், எனது எனும் இருவகைப் பற்றுக்களையும் நீக்கி ஐம்புலன்களையும் அடக்கி எவ்வுயிர்க்கும் அருளுடையோராய் வாழும் செம்புலச் செல்வர்" என்பார் வெள்ளை வாரணர். செம்புலச் செல்வரே நிறைமொழி மாந்தர் ஆவார்.

யோகாந்தத்தில் தியானம் செய்து பரம்பொருளை மனதில் தேர்ந்தெடுத்த உருவத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். அது பின் அருவமாக மாறி நெற்றிக் கண்ணொளி கிடைக்கும். அதன் துணைகொண்டு உடல் தத்துவங்களில் ஒவ்வொரு தத்துவமாக தாச, புத்தி, சக மார்க்கத்தில் ஏறி கடைசியில் சன்மார்க்க நிலையில் ஒவ்வொரு தத்துவத்தையும் நீங்கி மேலேறி, இப்படி 36 தத்துவங்களையும் நீத்தல் வேண்டும். இதனையே ரூப, தரிசன, சுத்தி என்று தசகாரியத்தில் கூறுவர். அப்படி ஏறிவரும்போது கலை என்ற தத்துவத்தை அடையும் போது கலாந்த அனுபவம் வரும். அங்கே நமக்கு சொர்ணதேகம் அமையும். அதாவது பசுகரணங்கள் எல்லாம் பதிகரணமாக மாறிவிடும். அப்போது பதிகரணமானதாலே ஆன்மா சொல்லும் மொழி நிறைமொழியாகும். நிறைமொழி மந்திரமாகும். மந்திரம் ஆற்றல் மிக்கது ( சண்முகவேல் முருகன், திருமந்திரம், ப.165) என்பர். அவ்வழி நிறைமொழி மாந்தர் கூற்று மந்திரமாகிறது எனலாம்.

## குறைமொழியும் நிறைமொழியும்

சாதாரணமான மக்கள் பேசும் மொழி குறைமொழியாகும். ஆனால், "சாதாரணச் சொற்களை எடுத்துக்கொண்டு தங்கள் ஆற்றல் காரணமாக, தம்முடைய சக்தி முழுவதையும் அந்தச் சொற்களில் ஏற்றி, "இவை மந்திரங்களாக ஆகக் கடவன" என்று ஆணையிடுவதன் மூலம்

அவற்றை மந்திரங்களாக மாற்றுகிறார்கள்" (ஞானசம்பந்தன் அ.ச.) மந்திரங்கள் என்றால் என்ன? ப.3) என்பர்.

சாதாரணச் சொற்கள் அதிர்வுகளைப் பெறும்போது அவை மந்திரங்களாகி விடுகின்றன எனலாம். இந்த அதிர்வுகளை அறிந்து சான்றோர்கள் அவற்றை ஒருங்கிணைத்தார்கள். இதற்கு, "இந்த அதிர்வுகளை எல்லா எழுத்துக்களும் சொற்களும் பெற்றிருந்தாலும் எந்த அதிர்வுகளோடு, எந்த அதிர்வுகளைச் சேர்த்தால் அவை பயன்படும் என்பதை ஆராய்ந்து அவர்கள் அறிந்திருந்தார்கள். அப்படி அறிந்திருந்த காரணத்தினாலேதான் இந்தப் பல்வேறு எழுத்துக்களை ஒன்று சேர்ப்பதன் மூலம் பல்வேறு அதிர்வுகளை ஒன்றுசேர்த்துப் புதியதொரு ஆற்றலை அவை பெறுமாறு செய்கின்றார்கள். அப்படி ஆற்றலைப் பெறுமாறு அவற்றைச் செய்துவிட்ட பிறகு அவை மந்திரங்களாக மாறிவிடுகின்றன...........................................................................................
................. பரம கருணையுடையவர்களாகிய நம் முன்னோர்கள் தம்முடைய பேராற்றலை இந்த ஒலிக்கூட்டங்களில் செலுத்தி, செல்லுமாறு நமக்குத் தந்திருக்கிறார்கள்" என்ற கூற்று அரண் செய்கிறது எனலாம்.

நிறைமொழி மாந்தரால் சொல்லப்படுகிற மறைமொழியின் பொருள் குறையறிவு உடையவர்களாகிய நம் போன்றோரால் அறியக் கூடுவதாயில்லை. ஆயின், அவற்றை நிறைமொழி மாந்தர் கூற்றை விடாது, கூறும்போது சொல்லின் ஆற்றல் நமக்கும் கிடைத்துவிடுகிறது எனலாம்.

**நிறைமொழி மாந்தரும் திருமுறைவாணர்களும் :**

நிறைமொழி மாந்தராக நின்று நிலைப்பவர்கள் திருமுறை பாடிய அருளாளர்கள். அவர்தம் வாழ்வின் நிகழ்வுகள் அவர்களை நிறைமொழி மாந்தர்களாகவும், அவர் பாடிய திருமுற்றகளை மறைமொழிகளாகவும் உயர்த்துகின்றன எனலாம்.

இரத்தமும் சதையுமாய் இந்த மண்ணில் நடமாடிய மனிதப் புனிதர்களின் வரலாறு (பொன்னம்பல அடிகளார், சிறப்புரை, திருமுறைக் கருத்தரங்கம், தமிழ்ப்பல்கலை, தஞ்சாவூர், 20/08/07) பெரியபுராணம், அந்தப் பெரியபுராணம் திருமுறைவாணர்களது அருள் வரலாற்றையும், அவர்கள் நமக்களித்த திருமுறைகளின் பெருமைகளையும் எடுத்துரைக்கின்றன. எனலாம். மந்திர ஆற்றல் உடைய மறைமொழிகளாக உள்ளமையைத் தெளிவுபடுத்தும் வகையில் அமைகின்றன எனலவாம்.

(தொடரும்)

# கந்தசஷ்டியின் மகிமை

(சித்தாந்த இரத்தினம் பாம்பனார் – வாரியார் அடிப்பொடி.
**செ.வே. சதாநந்தன்)**

முருகன், குமரன், குகன், கந்தன், ஆறுமுகன் என்றெல்லாம் பக்தர்களால் புகழப்பெறும் செந்தமிழ்க்கடவுளின் பல்வேறு விழாக்களில் மிகவும் முக்கியத்துவம் பெற்ற விழாவே கந்த சஷ்டிப் பெருவிழாவாகும். சஷ்டி என்றால் ஆறு என்று பொருள். எனவே சஷ்டி விழா ஆறுநாள் விழாவாகும். கச்சியப்ப சிவாசாரியாரின் கந்த புராணமும், பாம்பன் சுவாமிகளின் முதல்வன் புராண முடிப்பும் இவ்விழாவை விளக்குகின்றன.

தேவர்களைக் கொடுமைப்படுத்திய சூரபதுமன், அவன் தம்பிகளாகிய தாருகன், சிங்க முகன் ஆகியவர்களோடு முருகப் பெருமான் போரிட்டு வென்று தேவர்களைச் சிறைமீட்டு, அவர்களுக்கு ஆட்சியுரிமை தந்து, தேவருலகை வாழ வைத்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது கந்த சஷ்டிப் பெருவிழா. செவ்வேட் பரமனாகிய கந்தனுக்கும், சூரபதுமனுக்கும் போர் நடைபெற்ற இடம் திருச்செந்தூர்.

போருக்குப் பின்னர் முருகன் இந்திரன் மகளாகிய தெய்வ யானையை மணம் செய்த இடம் திருப்பரங்குன்றம். அது ஏழாம் நாள் விழா.

செந்தமிழ் நாட்டில் நடைபெற்ற வரலாற்றை மையமாகக் கொண்ட செந்தமிழ்க் கடவுளின் தெய்வப் பெருவிழாவே கந்த சஷ்டிப் பெருவிழா. ஆன்மாக்களுக்கு அல்லது மானிட உயிர்களுக்கு மூன்று வகையான அழுக்குகள் உண்டு. மூலமாகிய முதல் அழுக்கே ஆணவம். அதை ஒட்டி ஆன்மாக்களுக்கு உண்டாகிய இரண்டு அழுக்குகள் உண்டு. அவைகள் மாயை, கன்மம் எனப்பெறும். மாயையானது உலகப் பொருள்களில் கவர்ச்சியை உண்டாக்கி ஆன்மாக்களுக்கு மோகத்தை உண்டு பண்ணும். ஞானிகளைக் கூட மயங்க வைத்துவிடும். மயக்கத்தை உண்டாக்குதலும், ஆன்மாக்களை உலகப் பொருளின் மேல் பற்று முதலியவைகளை ஏற்படுத்துதலும் ஆகிய இரண்டு வகைகளில் செயற்படுவது மாயை. சூரபதுமனின் ஒரு தம்பியாக நின்ற தாருகனே மாயை மயமாக நின்று செயல்படுபவன்.

அடுத்த அழுக்கானது கன்மம். இதுவும் இரண்டு வகைப்படும். நல்வினை, தீவினை என சிங்க முகன் கன்ம மயமாக நின்றவன்.

மூன்றாவது மூல அழுக்கே ஆணவம். இதுவும் நான் என்றும், எனது என்றும் செயல்படும். சூரபதுமன் ஆணவ மயமாக நின்றவன். மூன்று அழுக்குகளும் ஆறாகப் பிரிந்து செயல்பட்டன. ஆகையால் ஆறு நாட்களில் அவைகளை அழித்து ஆன்மாக்களுக்கு உண்மை ஞானம் கொடுத்தான் கந்தன் என்பதே கந்த சஷ்டிப் பெருவிழாவின் தத்துவம்.

இந்த மூன்று அழுக்குகளிலிருந்து நீங்கிய மனிதனின் ஆன்மா இறைவனடி சேர்ந்து இன்புற்றிருக்கும். உலகமும், உலகப் பொருள்களும் இறைவன் படைப்புகள் என்று உணர்ந்தால் மாயையிலிருந்து விடுபடலாம். தீவினைகளை எப்போதும் செய்யக்கூடாது. நல்வினைகளைச் செய்யும் போது அவைகள் நம் முயற்சியென்று கருதாமல், அவைகளை இறைவன் நம் மூலமாகச் செய்விக்கிறான் என்று உணர வேண்டும். அப்போது நல்வினைப் பயன் நம்மைச் சாராது. மறுபிறப்பும் ஏற்படாது. அறவாழ்க்கையை மேற்கொண்டு, எப்போதும் இறைவனைச் சிந்தித்து எல்லா நிகழ்வுகளும் அவனால் நிகழ்கின்றன என்று கருதினால் ஆணவத்திலிருந்து விடுபடலாம்.

இத்தத்துவத்தையும் நம் கையிலுள்ள ஐந்து விரல்கள் மூலம் அறியலாம். பெருவிரல் இறைவனையும், அதற்கடுத்த ஆள்காட்டி விரல் ஆன்மாவையும், மற்ற மூன்று விரல்கள் முறையே ஆணவம், கன்மம், மாயை ஆகியவைகளைக் குறிக்கும். ஆள்காட்டி விரல் மற்ற மூன்று விரல்களோடு இணைந்திருப்பது ஆன்மா ஆணவம், கன்மம், மாயை ஆகியவைகளுடன் இணைந்திருப்பதைக் குறிக்கும். ஆள்காட்டிவிரல் மற்ற மூன்று விரல்கள் இணைப்பிலிருந்து விலகி சற்று வளைந்தவுடன் பெருவிரலை அடையமுடியும். அதாவது ஆன்மா ஆணவம், கன்மம், மாயை ஆகியவைகளிலிருந்து விடுபட்டால் இறைவனடி சேரும். தட்சணாமூர்த்தி சுவாமிகளின் "சின்முத்திரை" இந்தத் தத்துவத்தைக் குறிக்கும்.

இறைவனுக்குத் தேங்காய் படைப்பதும் இத்தத்துவத்தைக் குறிக்கும். பச்சைமேல்மட்டை மாயையும், நார் கன்மத்தையும், ஓடு ஆணவத்தையும் குறிக்கும். இம்மூன்றும் நீக்கப்பட்டவுடன் தேங்காயின் வெள்ளைப் பருப்பு சுத்த ஆன்மாவைக் குறிக்கும்.

கந்தப் பெருமான் சூரபத்மனை வென்று அவனைத் தன் மயில் வாகனமாகவும், சேவற்கொடியாகவும் மாற்றினான். சிங்கமுகாசூரன் உமையம்மையின் சிங்க வாகனமாக மாற்றப்பட்டான். தாராகாசூரன் அய்யனாரின் வாகனமாக நீக்கப்பட்டான். கந்த கஷ்டி விரதத்தை முறையாக அனுஷ்டித்தால் கந்தப் பெருமான் திருவடியடைந்து நிலைத்த இன்பம் பெறுவோம்.

---

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# அருட்டிரு பாம்பன் சுவாமிகள் அருளிய திருக்குன்றக்குடிப்பதிகம்

(சைவத்தமிழ்மணி.வித்துவான். **க. கதிரேசன்**)
(குன்றக்குடி ஆதீனப் புலவர்)

நாசமில் லாஉயிர் எல்லாம் நற்கதி சேரனன் றேஓர்
மாசில்உ ருக்கொண்டு அங்கு மன்றுதிருக்கோயில் கொண்டு
தேசிக னாய்அவிர் அன்பைச் சிந்தையில் வைத்துள்ள என்றன்
கூசல்அ றுத்தருள் கோவே குன்றக் குடியுறை தேவே.

## கூட்டுமுறை

கோவே... தேவே, நாசமில்லா உயிர்.... ஓர் மாசில், மன்னு தேசிகனாய், திருக்கோயில் கொண்டு, அங்கு அவிர் அன்பை.... அருள்.

## குறிப்புரை

நாசமில்லா உயிர் = அழிவற்ற உயிர். நற்கதி = வீடுபேறு. ஓர்மாசில் உரு = ஒப்பற்ற குற்றமற்ற திருவுரு. மன்னு = நிலையான, தேசிகனாய் = ஒளியைச் சொரிகின்றவனாய் (தேசு+இகு+அன். இகுதல் - இகு = சொரிதல் - சொரி) அவிர் = ஒளிர். கூசல் = அச்சம்.

## பொழிப்புரை

கோவே; குன்றக்குடியுறை தேவே; அழிவற்ற உயிர்க்குலம் எல்லாம் வீடுபேறு அடையும் பொருட்டாகவே ஒப்பற்ற குற்றமற்ற திருமேனி தாங்கி, நிலையாக ஒளியைச் சொரிகின்றனவாகத் திருக்கோயில் கொண்டுள்ள உன்பால், ஒளிரும் அன்பைச் சிந்தையில் வைத்துள்ள எனது இறப்பு பிறப்பு பற்றிய அச்சத்தைத் தீர்த்தருள்க.

## விளக்கம்

"உடம்பே அழிவது; உயிர் எக்காலத்தும் அழியாதது என்பதை உணர்த்த "நாசமில்லா உயிர்" எனப்பெற்றது. "மன்னுயிர்" என்ற

பொய்யாமொழியையும், "பதியினைப் போல் பசுபாசம் அநாதி" என்ற திருமந்திரத்தையும் நினைவூட்டுகிறது.

மாசற்ற ஞானத்திருவுருவே சிவபரம்பொருள் திருவுரு என்பார், "மாசில் உருக் கொண்டு" என்றார்.

"சிவனோடு ஒக்கும்தெய்வம் தேடினும் இல்லை
அவனோடு ஒப்பார்இங்கு யாவரும் இல்லை"

திருமந்திரம் - 5:1-2.

என்பதால் ஓர் - ஒப்பற்ற - என்ற அடையுடன் "ஓர் மாசில் உரு" என்றார்.

உலகிற்கு ஒளிசொரியும் ஞாயிறு திங்கள் ஆகியன என்றும் நிலைத்து ஒளிதருவனவல்ல; ஒரு நாள் அழியக் கூடியன என்பது மெய்ப்பொருளியலாகும். விஞ்ஞானியரும் கூறும் செய்தி. ஆனால் என்றும் நிலைத்து நின்று ஒளி சொரிகின்றவன் பெருமான் ஒருவனேயாதலின் ஞாயிறு திங்களிலிருந்து பெருமானைப் பிரித்து உணர்த்த "மன்னு" அடைமொழி பெய்து "மன்னு தேசிகனாய்" என்றார்.

நம்மவர் அச்சம் பல திறத்தன. ஞானிகள் அச்சம் ஒன்றே. அது பிறப்பு, இறப்பு பற்றியது. பிறப்பு அச்சம் வாழ்நாள் வீணாகிவிடுமோ என்பதால் நிகழ்வது. "மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்ற அப்பரடிகள்,

துறக்கப் படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோ(டு)
இறப்பன்; இறந்தால் இருவிசும்(பு) ஏறுவன்; ஏறிவந்து
பிறப்பன்; பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ(என்று) என் உள்ளம் கிடந்து மறுகிடுமே.

(திருமுறை.4.தனித்திருவிருத்தம்.8)

(மறுகிடும் = என்நெஞ்சு குழம்புகிறது) என்பார்.

"இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏதுஆகுமோ" என்பதும் பிறவியச்சம் பற்றியதே. "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என் கடவேன்" என்ற மணிமொழியும் நோக்குக.

## இலக்கணக் குறிப்பு :

இல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயெரெச்சம். சேரஎன்றே - தேற்றேகாரம். எல்லாம் - எல்லாமும் என்பதன் உம்மை குறைந்தது. அவிர் அன்பு - வினைத்தொகை. கூசல் - தொழிற்பெயர்.

(தொடரும்)

# ஆன்மீக உறவும் - அறிவியல் உறவும்

**பாகம் - 12**

(டாக்டர். **கே. பாலகிருஷ்ணன்**)

மக்களின் அறியாமையை அகற்றுவதற்கு அடிகளார் அவர்கள் தன்னால் ஆன முயற்சிகளை எடுத்தார்கள் என்று குறிப்பிட்டோம். மாநிலத்தில் கிராமப்புறங்களில் பல இடங்களில் ஆரம்பப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள் அமைத்து தரமான கல்வி கிடைக்கும் வாய்ப்பை ஏற்படுத்தியதும், மிகவும் பின்தங்கிய பகுதியில் கல்லூரி ஒன்று அமைத்து கல்விப்பணியில் அடிகளார் அவர்கள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டதையும் அனைவரும் அறிவோம். குறிப்பாக கிராமப்புறங்களில் அறிவியல் கல்வியின் தரம் மிகவும் குறைந்திருப்பதைக் கண்டு மனம் வருந்தினார்கள். செக்ரியின் உதவியால் மைய அரசின் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத் துறை மூலம் மாவட்டத்தில் 10 பள்ளிகளுக்கு அறிவியல் சோதனைக் கருவிகள் வாங்கிக்கொடுத்தார்கள். அருகாமையில் உள்ள மற்ற பள்ளிகளுக்கும் அதைப் பயன்படுத்த அனுமதி வாங்கித் தந்தார்கள். திருப்புத்தூரில் மடத்திற்கு சொந்தமான இடத்தில் பொது ஆய்வகம் ஒன்று ஆரம்பிக்கப் பட்டது.

1980 ஆம் ஆண்டு கிராமத் திட்டக்குழுவின் செயற்குழுக்கூட்டம் ஒன்று நடந்தபோது அடிகளார் அவர்கள் கூறியதை நினைவு கூறுகிறோம்.

குன்றக்குடி திருவிழாக்களுக்கு மக்கள் திரளாக வருகிறார்கள். அவர்கள் பயன்பெறும் வகையில் அறிவியல் கண்காட்சிகள் அமைத்தால் மக்களிடையே அறிவியல் விழிப்புணர்வை ஏற்படுத்த ஏதுவாகும். மாவட்டத்திலும் பல இடங்களில் முக்கியமாகப் பள்ளிகளில் அறிவியல் கண்காட்சிகள் அமைக்க வேண்டும்.

செக்ரி விஞ்ஞானிகள் அடிகளார் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப அதே ஆண்டு குன்றக்குடி உயர்நிலைப் பள்ளியில் மற்ற பள்ளிகளையும் இணைத்து மாணவ, மாணவிகள் பங்கேற்க பயன்தரும் கண்காட்சியை நடத்தினார்கள். இதைத் தொடர்ந்து மாவட்டத்தில் உள்ள எல்லா ஒன்றியங்களிலும் ஆண்டுக்கொரு பள்ளியைத் தேர்ந்தெடுத்து அறிவியல் கண்காட்சி நடத்தப்பட்டது. மாவட்ட அளவிலும் கண்காட்சிகள் நடத்தப்பட்டன. பல ஆண்டுகள் தொடர்ந்து இந்த அறிவியல் கண்காட்சிக்கு அடிகளார்

அவர்கள் வழி காட்டி அனைத்து உதவிகளும் செய்தார்கள். கண்காட்சி பத்து நாட்களுக்கு முன்பாக பள்ளிக்குச் சென்று அங்கு வேண்டிய வசதிகளை அறிந்து, தானே முன்னின்று செய்தும் கொடுத்தார்கள். குடிதண்ணீர் வசதி, கழிப்பறை வசதி, கூரை புதுப்பித்தல் போன்ற பல பணிகளுக்கு நிதியுதவியும் செய்ததோடு அல்லாமல், பங்கேற்றவர்களுக்கு வேண்டிய உணவு வசதிகளையும் மடத்தின் மூலம் செய்தார்கள். ஆதீன டிராக்டர்களில் உணவுப் பொட்டலங்கள் எடுத்துச் செல்லப்படுவது இன்றும் பசுமையான நினைவு. அப்பொழுது தமிழ்நாடு மாநில அறிவியல் மற்றும் தொழில் நுட்பக் கழகத்தின் செயலர் முனைவர் திரு. தர்மலிங்கம் அவர்கள் நிதி உதவி செய்ததுடன் தானும் 3 நாட்கள் தங்கி அடிகளார் அவர்களுடன் கண்காட்சியில் ஊர்தோறும் சென்று பார்த்து ஊக்குவித்தது குறிப்பிடத்தக்கது. செக்ரி இயக்குநர் K.I. வாசு ஆய்வகத்தின் விஞ்ஞானிகளைப் பங்கு பெறச் செய்து, தானும் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்கள். பள்ளித்துறை இயக்ககம், மாவட்ட கல்வித் துறை, அரசுத் துறைகள், பள்ளித் தாளாளர்கள், ஆசிரியப் பெருமக்கள், மாணவ, மாணவிகள் பொதுமக்கள் என அனைவரையும் ஈடுபடுத்தி உற்சாகப்படுத்தி கண்காட்சிகளை திருவிழாக்களாகவே அவர்கள் கனவை நினைவாக்கினார்கள். அறிவியலில் ஒரு பெரிய புரட்சி என்று சொல்லாவிட்டாலும், அவர்களுடைய முயற்சி கிராமப்புறங்களில் அறிவியல் விழிப்புணர்வை பெரிதும் உண்டாக்கியது. வேளாண்துறை, கால்நடைத் துறைகள் பங்கு பெற்று நவீன தொழில் நுட்பங்களை விளக்கியதனால் வேளாண் மக்களும் பயன்பெற்றார்கள்.

கடைசி சில ஆண்டுகள் அவர்கள் உடல்நிலை சரியில்லை. நடந்தால் மூச்சு வாங்கும் அந்த நிலையிலும் கிராமப்புறங்களுக்கு பயணம் செய்து, கண்காட்சிகளை பார்வையிட்டு மாணவர்களை கேள்வி கேட்டு ஊக்குவிப்பார்கள். சிவகங்கையில் ஒரு மாணவன் "கனவுக் கிராமம்" என்று ஒரு காட்சிப் பொருள் வைத்து நவீன வசதிகளுடன் கூடிய வீடுகள், சிறிய தொழிற் கூடங்கள், கல்விக் கூடங்கள், பூங்காக்கள் என்ற அனைத்தையும் சுட்டிக்காட்டியிருந்தான். நமது நாட்டில் இந்த கனவு கிராமத்தை நிறுவ எவ்வளவு நூற்றாண்டுகள் ஆகும் என்று அடிகளார் அவர்கள் கேட்டதற்கு இன்னும் பல நூற்றாண்டுகள் ஆகும் என்றான் அம்மாணவன். நீ முயற்சி செய்தால் பல ஆண்டுகளில் முடிக்கலாம் என்று அவனிடம் அடிகளார் அவர்கள் கூறினார்கள். பிப்ரவரி 28 அன்று அறிவியல் நாள் அன்று விஞ்ஞானிகளுக்கு பொன்னாடை போர்த்தியும், இனிப்புகள் வழங்கியும் மகிழ்ந்தார்கள்.

செக்ரியில் கணிதம் மற்றும் அறிவியல் ஆசிரியர்கள் தங்கி சிறப்பு பயிற்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். தமிழ்நாடு மாநில அறிவியல் தொழில்நுட்பக் கழகமும், செக்ரியின் கிராம அறிவியல் மன்றம் மற்றும் குன்றக்குடி திட்டக்குழுவும் இணைந்து இதை செயல்படுத்தியது. அது போன்று தலைமை ஆசிரியர்களுக்கு கணினிப் பயிற்சி செக்ரியில் ஒரு வாரம் வழங்கப்பட்டது. அடிகளார் அவர்கள் ஆசிரியர்களுடன் தினமும் கலந்துரையாடி ஊக்குவிப்பார்கள்.

ஆசிரியர்கள் தினத்தன்று நிகழ்ச்சிகளில் தவறாமல் கலந்து கொண்டு சிறப்பான சேவைகளைப் பாராட்டி பரிசுகளும் வழங்குவார்கள்.

மா்வட்ட அளவில் கல்வியின் தரத்திற்கும், அறிவியல் வளர்ச்சிக்கும் தன்னை முழுமையாக ஈடுபடுத்தி அர்ப்பணிப்புடன் செயல்பட்டார்கள். அவர்களுடன் இணைந்து விஞ்ஞானிகளாகிய நாங்களும் எங்களது சிறிய பங்காக அளித்ததில் வாழ்க்கையின் பேறாகக் கருதினோம்.

(தொடரும்)

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

**– ஆசிரியர்**

# சிந்தனை வட்டம்

இருபெரும் தியாகச் செம்மல்களான பொதுவுடைமைச் சீலர் ஜீவாவும் பசும்பொன் தேவர் திருமகனாரும் நாடும் மொழியும் சமுதாயமும் செழிக்க - உயர ஆற்றிய அரும்பணிகளை நயம்பட விரித்துரைத்தும் சுவைபடச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தும் சிறப்பாசிரியர் சீர்வளர்சீர் அடிகளார் பெருந்தகை அவர்கள் புரட்டாசி இதழில் ஜீவா குறித்து ஆற்றியுள்ள நல்லுரையையும் ஐப்பசித் திங்களிதழில் தீட்டியுள்ள பசும்பொன்னார் அவர்கள் பற்றிய தலையங்கமும் இருபெரும் ஆணிப் பொன் முத்துக்கள்! காலச் சூழலால் வரலாறறியாமல் தடம் மாறிச் செல்லுதற்கு முனையும் இளைய தலைமுறையினருள் பலருக்கு -

"நாம் நாட்டிற்கு என்ன செய்தோம், ஒப்பிலாச் சேவைகள் இவர்கள் போல்" என்னும் ஓர் எண்ணத்தினைத் தோற்றுவிக்கும் நல்வித்துக்களாக குருமகாசந்நிதானம் அவர்களின் உரையும் - தலையங்கமும் அமைந்துள்ளன. காலமறிந்து, நூற்றாண்டுவிழாக் காணும் அவ்விரு பெருந்தலைவர்களின் செம்மைசேர் புகழுக்கு மேலும் புகழ் சேர்க்கும் வண்ணம் "மக்கள் சிந்தனை"யை மணக்க வைத்த அடிகளார் அவர்கட்கு நம் நன்றியும் வணக்கமும்.

மேலும்,

பிறக்க - காண - இறக்க - நினைக்க

முத்தியருளும் நாற்பெருந்தலச் சிறப்புக்களை ஆன்மிகம் பொலிய சிவமணம் கமழ வழங்கியுள்ள பேராசான் ஆ. சிவலிங்கனார் அவர்கட்கும் பாராட்டுக்கள்.

பொதுவில் -

ஐப்பசிக்கு தீப ஆவளித் திருநாளில் சிறப்புமிகவுண்டு! ஆனால் - ஐப்பசித் திங்கள் மக்கள் சிந்தனை இதழோ அரிய பொருள்நிறை கட்டுரை ஆவளியால் புத்தொளி பரப்பியுள்ளது.

தமிழ்ச் சமுதாயம் தழைக்க இவைபோல் கருத்துக்கோவைகளை வெளியிடுகிற மக்கள் சிந்தனை இதழாசிரியரின் அரிய பணிகள் மேன்மேலும் தொடரட்டும்! வாழ்த்துக்கள்!

- அவிநாசி. **தமிழ்அமுதன்**

நாளை எப்படி சமய உலகம் இருக்க வேண்டும்? சமயம் மனிதனை உழைக்காமல் செல்வன் ஆக்க அன்று; அவனை வாழ்வாங்கு வாழச் செயது வாழும் நிலையை உயர்த்தத்தான் சமயம் மீண்டும் தொண்டு நெறியின் உறைவிடமாக மாறவேண்டும். மானுட சமூகத்தின் மையங்களாகத் திருக்கோவில்கள், சமய நிறுவனங்கள் மாறவேண்டும்.

**- பொன்னம்பல அடிகளார்**

# MANOHAR TRAVELS

**(All World Tour Organizer)**

Mobile : 98430 - 98898 (24 Hours)
94433 - 80150
E-mail : manohartravvels@rediffmail.com




**திருக்கயிலாயம் - மானஸரோவர் முக்திநாத் - 16 நாட்கள் திருப்பயணம்**

**மே முதல் செப்டம்பர் வரை மாதம் ஒரு குழு புறப்படுகிறது.**

யாத்திரைகள் சென்று வர அணுகவும்.

அனைத்து உள்நாடு – வெளிநாடு சுற்றுலாக்களுக்கு அணுகவும்



**மனோகர் டிராவல்ஸ்**

2/176, பெரியண்ண தெரு
கலைமகள் ஆரம்பப் பள்ளி ரோடு,
ஈரோடு – 638 001
Ph: 0424-2269940, Mobile: 94433-80159
E Mail :manohartravvels@rediffmail.com



**கைலாஷ் டிராவல்ஸ்**

11, வீராசாமி வீதி (முதல் தளம்)
எவரெஸ்ட் எதிர்ரோடு,
பெரியமேட், சென்னை – 600 003
Ph: 42053923, Cell: 94433-80154
E Mail:kailashtravvels@packagtours4u.com

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - November 2007 Price Rs. 5-00
Date of Publication 20-11-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166